# அணில்

ஆங்கில அரசாங்கம் புழங்கிய பழங்கால, அகன்று கிடக்கும் கட்டிடங்களின் நீள் தாழ்வாரங்கள். முனை கூம்பிய வலை சன்னல்கள் அணைத்த தாழ்வாரங்கள். மேலே தோரணவாயில் சுவர் ஒவ்வொரு பத்தடிக்கும். வெய்யில் உள்ளே வராத மங்கிய தாழ்வாரங்களின் தோரணங்களின் கீழ் நடந்துகொண்டே போனால் அதன் இருள் முடிவில் இருப்பது புத்தசாலை என்ற எதிர்பார்ப்பு. எதனால் என்று தெரியவில்லை. தாழ்வாரத்தில் கால்வைத்ததுமே அந்த எதிர்பார்ப்பு. வேகமூச்சு. வாயில் ஓர் எச்சில் ஊறல். நிறையத் தடவைகள் முனையில் புத்தகசாலைதான் நிஜமாகவே. பழுப்பாய்க் கிடப்பது. இரும்பு அலமாரிகளில் விழுந்து கிடப்பது.

ஒரு முறை. சீக்கிர இரவுகள் அப்போது, அஸ்தமனம் அப்போதுதான் ஆகி முடிந்திருந்தது. தாழவாரத்தில் கால்வைத்ததுமே ஒரு முகம் அந்தரத்தில் மிதந்து வந்தாற்போல் எதிரே. ஆந்தைக் கண்களிலிருந்தே கிளம்பி கன்னத்துச் சதை, கழுத்து எல்லாம் அருவி வழிவதுபோல். திக்கென்றது. ஜில்லிட்டுப் போயிற்று. சுருங்கித் தொங்கும் சருமத்தைத் தள்ளிவிட்டுச் சில பற்கள் தோன்றின புன்னகையில்.

“பயந்திட்டியாம்மா.”

விளக்கு போடப்பட்டது. ஒரு நீண்ட தாழ்வாரம் உருப்பெற்றது. ஒரே தோரணச் சுவர்கள். குகைக்குள் போவது போல் உணர்வு. தாழ்வார முடிவில் சதுரக் கம்பிகள் போட்ட இரும்புக் கதவின் பின் மென்சிவப்பு ஒளி அடித்தது. இரும்புக் கதவின் மேலும் கீழும் ஒரு செம்புகை கவிந்திருந்தது. வேறு உலகத்துக்குத் திறக்கும் ஒரு நிழற் கதவாய் அது தெரிந்தது. அதைத் திறந்ததும் அங்கே சலங்கை ஒலியுடன் ஊர்வசி நடனம் இருக்கும் என்ற பிரமை தோன்றியது. தாழ்வாரங்கள் இல்லாமல் சிறு சந்துகளில் போனாலும், எனக்கு அவை தாழ்வாரங்களாகிவிட்டன. எந்த நடைக்குப் பின்னாலும் பழுப்பாய், நாக்குகளைத் தொங்கவிட்டு மல்லாந்திருக்கும் புத்தகங்கள்தாம் என்று எண்ணம். தொட்டு எடுத்தால் அட்டையில் ஒரு நாய்க்காது மடங்கல். அதை ஒட்டி ஒரு கீறல். அழுத்தமாக.

வலிக்கவலிக்க. சில சமயம் புத்தகத்தின் முழு பாரத்தையும் தாங்காது முதுகு ஒடிந்திருக்கும். அங்கு தொட்டதும் 'தப்' பென்று ஓசை வரும். தடவி உயிர்ப்பித்ததெல்லாம் அகலிகைதான். எந்தக் காவியத்தில் இடம் பெறுமோ தெரியவில்லை.

நிழற் கதவு பௌதிக உண்மையாய் எதிரே நின்றது. திறந்தான். சிறு தோட்டப்பாதை. முடிவில் சட்டங்கள் அடித்த ஒரு கனத்த மரக்கதவு திறந்து கிடந்தது.

"அல்லாரும் போயாச்சு. நீங்க வருவீங்கன்னு காத்திட்டிருந்தேன். நீங்க கேட்ட பொஸ்தகம் இதோ."

சடாரென்று காற்று அடித்தது. பக்கங்கள் படபடவென்று அடித்துக் கொண்டன. அட்டையின்மேல் கைவைத்து அழுத்தியபோது பக்கங்களின் நடுக்கம் கையில் ஊறியது. பக்கத்தில் கிழவர் இல்லை. முன்பகுதி விளக்கு தவிர மற்ற விளக்குகள் அணைத்தாயிற்று. உயர்ந்து கூரையைத் தொட்ட திறந்த இரும்பு அலமாரிகள். உள்ளேயே, தகடுவைத்த இரண்டு மாடிகள். ஏற இரும்புக்கழிப்படிகள். புத்தகம்மேல் வைத்த கையுடன் நான் மட்டுமே. கீழே கதவு மூலையில், காற்று அடித்ததில் ஏற்பட்ட பக்கங்களின் படபடப்புகள் ஒன்றாகி ஒரு கனத்த தட்தட்டாகியது. அப்போதுதான் அது எதிரே வந்தது. பசை போட்டு ஒட்டியிருந்த ஒரு புத்தகக்கட்டின் மேல் உட்கார்ந்தது. என்னை ஒரு பார்வை பார்த்துவிட்டுப் பசையை சுவாரஸ்யமாய் நக்க ஆரம்பித்தது. "வேண்டாமே." என்றேன். "அது சிந்தாமணி. பாலம்மாள் நடத்திய பெண்கள் பத்திரிகை. பின்னால், மங்கலாக ஒன்பது கஜப் புடவையுடன், அதுதான் அவர்."

"இப்போதுதான் அவருடன் உறவு ஆரம்பித்திருக்கிறது. இன்னும் நாங்கள் பேசிக்கொள்ளவில்லை. அவரைப்பற்றி முழுதும் தெரிய வில்லை. அவருக்கு வை.மு.கோவை அவ்வளவாகப் பிடிக்கவில்லை என்பது மட்டும்தான் தெரிந்திருக்கிறது."

அணில் கேட்டது. பாலம்மாளை ஒரு முறை பார்த்துவிட்டுப் போய் விட்டது. காற்றும், தட்தட்டும், விரல்களடியே படபடப்பும் தொடர்ந்தன.

இப்படி நினைவிலும் கனவிலும் நிறைய முறைகள் நடந்துவிட்ட படியால் எது நிஜம் எது கனவு என்று பிரிக்க முடியவில்லை. அது ஒன்றும் அவ்வளவு முக்கியமாகப் படவில்லை. விரல்களுடே புத்தகம் பொடிந்து விழுந்தது உண்மை. பொடித் துகள்கள் ஒட்டிக் கொண்டது உண்மை. பொடித் துகள்களுடன் முதல் கேசவர்த்தினி விளம்பர அப்ஸரஸ் உதிர்ந்ததும் வாஸ்தவம். பல முறைகள். நிஜத்திலும் கனவிலும். அதனால்தான் பிரித்துப் பார்ப்பதில்லை. கனவு என்று நினைத்துக்கொண்டிருக்கும்போத மின்விசிறி நின்று வியர்த்து வழியும். நிஜம் என்று ஒரு புத்தகத்தை முகரும்போது சன்னல் வழியாய்

மழைத்துளி முகத்தில் அடித்து எழுப்பிவிடும். நான் பொருட்படுத்துவ தில்லை. சில உறவுகள் கனவின் நீட்சியாய் நிஜத்திலும், நிஜத்தின் ஈவாய்க் கனவிலும் வரக்கூடாதா என்ன?

சன்னலருகே ஒரு பெரிய சாய்வு மேஜையில் பழுப்பேறிய கனத்த அகராதி இருக்கும். காற்று அடித்ததும் பெரிய பக்கங்களை வீசிக்கொள்ளும். குனிந்தால் முகத்தில் அடிக்கும்; வருடுவது போல் வந்து 'பி'யிலிருந்து 'ஜெ' வரை ஒரு புரளு புரளும். காற்றும் நின்றுவிடும். மீண்டும் 'பி'யில் வைப்பேன். செல்லமாக ஒரு பக்கம் மட்டும் கன்னத்தில் வருடிவிட்டுப் போகும். ஒரு வாசனையை விட்டுவிட்டு.

அலமாரியின் ஒரு முனையில் ஆரம்பித்து இன்னொரு முனைவரை தொட்டாவறுதான் நடை. உறவை ஸ்தாபிக்க. அழுக்கின்மேல் ஒரு தடவல். அம்மணக் குழந்தையை செல்லமாகத் தடவுவது மாதிரி. உங்களுடன் எல்லாம் உறவு உண்டு தெரியுமா? பெண்களுக்கு ஆசிரியப் பயிற்சி தரப் பள்ளி வேண்டும் என்று பத்தொன்பதாம் நூற்றாண்டில் மேரி கார்பென்டர் எழுதிய கடித நடுவின் கீறலை, என் விரல்தான் வருடியது. 'விவேக சிந்தாமணி'யில் இருந்த 'ராணி விக்டோரியா கும்மி'யின் மேல் பரவி, செவ்வண்ணம் ஏறித் துருப்போல் இருந்த புழுதியை நான்தான் ஊதிவிட்டேன். அது உதட்டில் பறந்து ஏறியபோது சட்டென்று நாக்கை வெளியே விட்டு உதட்டை நக்கி அதை விழுங்கிவிட்டேன். ஒரு பழைய தலைமுறை என் வயிற்றில் இறங்கியது. யாராவது யசோதை என் வாயினுள் பார்த்திருந்தால் ஒரு விக்டோரியா கும்மியைப் பார்த்திருக்கலாமோ என்னவோ.

புத்தகசாலை ஆரம்பித்ததுமே கிருஷ்ணர் ஒரு மூலையில் ரதத்தோடு வந்த தாமரை இலைத் தண்ணீர் உபதேசம் செய்துவிட்டார் போல் இருக்கிறது. யாரையும் எதுவும் தொடவில்லை. முழங்கால் அளவு உயர எவர்சில்வர் சாப்பாட்டுப் பாத்திரம் ஒவ்வொன்றும். மூன்றாம் மாடியில் பக்கிங்காம் கர்னாடிக் மில் தொழிலாளிகளின் முதல் வேலை நிறுத்தம் மே 1921இல் இருக்கும் போது கீழே:

"கறியாடீ இன்னிக்கு? வாசனை வருதே."

"ஆமாம்பா. கொத்துக்கறி பண்ணினேன். காலையில எழுந்து. புரட்டாசி மாசம் சாப்பிடாமே ஒடம்பே 'வீக்' காயிருச்சிப்பா. மசாலா எல்லாம் இவுரே இடிச்சாரு. இன்னும் டயம் ஆவலை. பன்னண்டு மணிதான் ஆவுது. அந்த மூலை மரத்துக் கீழே உக்காந்துக்கலாம். தண்ணிப் பானையை எடுத்திட்டுப் போயிடலாம்."

"பீடா போட்டுக்கலாம் இன்னிக்கு."

"ஸாரு வராரு."

"என்னம்மா, சாப்பாட்டுப் பேச்சா? என் வீட்டுக்காரி பழம் சாப்பிடுங்கறா. தொப்பை வந்திருச்சாம். பொம்பளையா பொறக் கணும்மா. ரெண்டு குழந்தை பெத்து ஊதணும். ரவிக்கை மூச்சைப் பிடிக்கணும்."

"கொஞ்சம் தொந்தி வந்திருச்சு சார் உங்களுக்கு. அதான் சொல்றாங்க அப்பிடி."

"அடுத்த ஜன்மத்தில பொம்பளையா பொறக்கணும்மா. இடுப்பெல்லாம் சதை தொங்கணும். எலிஸபெத்து மாதிரி."

"என்ன சார், என்னை இழுக்கறீங்க? வஞ்சனை இல்லாதவ சார். அதான் குச்சியாட்டம் இல்லை."

"பீடா வாங்கப் போவீங்க இல்ல? அரை டஜன் பழம் வாங்கிட்டு வந்திடுங்க எனக்கு."

"பலாப்பழமா சார்?"

"யார்டா இவ? அவன் அவன் பசியில் செத்துகிட்டு வேலைக்கு வரான். தொந்தி பிடிக்கலியாம் தொந்தி. அட, ஒரு கரண்டி நெய் கண்ணுல காட்டிட்டா என்ன, இல்ல வெங்காயத்தை வெண்ணேல ஒரு பெரட்டுப் பெரட்டி ரொட்டி மேல போட்டா என்ன, நாள் முக்சூடும் ஒழைக்கிறேன் இல்ல . . . உங்களை எல்லாம் . . ."

"நாங்க என்ன சார் பண்ணோம்?"

"வேலையைப் பாருங்கம்மா. அஞ்சு லட்சம் பொஸ்தகம் அட்டவணை போடணும். கொத்துக் கறியாம். புருஷன் மசாலா இடிச்சாராம் . . ."

சிரிப்பு.

கீ . . . க்விக் . . .

தொழிற்சாலைச் சட்டத்தின்மீது வந்து உட்கார்ந்தது. மீண்டும் கூச்சல் போட்டது.

கிக் . . . றிக் . . .

"பாரு, நீ ஒரு கொட்டை தின்னி, இங்க என்ன வேலை உனக்கு? வெளில மரம் இல்ல? போயேன். இந்தப் பசையில என்ன இருக்கு? மரத்துல ரெண்டுவாட்டி ஏறு. இறங்கு. இது என்ன கெட்ட பழக்கம்?"

புத்தகத்தின்மீது நாலு காலையும் சடக்கென்று பரப்பிக் குப்புறப் படுத்தது. வலை சன்னலின் ஓர் ஓட்டை வழியாக நெளிந்தோடும் சூரிய ஒளிக்கோடு அதன் தலையில் மெத்தென்ற அடித்தது. கண்ணை மூடிக்கொண்டது.

அதைத் தொடவில்லை. அற்புதங்களில் நம்பிக்கை இல்லை. இருந்தும் அதைப் பரீட்சித்துப் பார்க்க விருப்பம் இல்லை. ராஜகுமாரன்களுடன் பேசிப் பழக்கமில்லை.

மூன்றாம் மாடி சற்று அலட்சியப்படுத்தப்பட்ட மாடி, மூலையில் தெலுங்கு புத்தக அட்டவணை எடுப்பவர் இடையிடையே முணுமுணுப்பார். மற்றவை கிழிந்த, கிழியப்போகிற, அட்டவணை எடுக்கும்வரை பசை தடவி சாவு தள்ளிப்போடப்பட்ட புத்தகங்கள் தாம். ஓட்டையுள்ள இரும்புத் தகட்டுத் தரை. அதன் மூலம் கீழ் வரை பார்க்கலாம். ஒருமுறை அதன் வழியே மதுரை மீனாட்சி கோயிலில் பல வருடங்கள் முன் உபயோகித்த பேயோட்டும் பாடல் புத்தகம் லைப்ரரியன் மண்டையில் என் கை நழுவி விழுந்திருக்கிறது.

இதன் கூரையைத் தொடும் திறந்த இரும்பு அலமாரிகளில் என் விருப்பத்தைப் பூர்த்தி செய்யத் தொந்தியை மறந்து அவர் ஏறியது உண்டு.

"மேலே எட்டலை சார். பாத்துச் சொல்லுங்களேன்." ஏறியதும் மேல் அடுக்குப் புத்தகங்களின் மேல் கையால் அடித்தார். அலையாய்ப் புழுதி அடித்தது. இரண்டு கால்களையும் எதிரெதிரே இருந்த அலமாரிகளில் பரப்பி பதித்து நின்று, தலைமட்டும் மேக மண்டலம் போன்ற புழுதியில் அமிழ்ந்து நின்றதை அண்ணாந்து கீழிருந்து பார்த்தபோது, அற்புத விளக்கைத் தடவியதும் வெளிப்பட்ட, வேலை கேட்கும் நல்ல பணிவுள்ள பூதம் மாதிரி அவர் பட்டார்.

"மேலே என்ன இருக்கு சார்?"

"புழுதி . . . புழுதி . . ."

"இல்ல சார் புஸ்தகம்."

"பார்க்கறேம்மா. இப்படி எல்லாம் ஏறாமலேயே நெறைய நல்ல புஸ்தகம் எழுதறாங்கமா. குப்பைம்மா இதெல்லாம் வெறும் குப்பை."

"நானே வேணா ஏறறேன் சார்."

"வேண்டாம்மா. இது என் கடமை . . ." பத்துத் தும்மல்கள் போட்டார்.

"வெறும் பொம்பளைகள் புஸ்தகம்மா. வேணுமாம்மா?"

"போடுங்க சார் கீழே."

தொப்பென்று விழுந்தன. 'பெண்மதி போதினி'யும் 'ஜகன் மோகினி'யும்.

தொடர்ந்து பல.

விழுதல் புத்தகங்களோடு இணைந்த ஒன்றாகிவிட்டது எனக்கு. கூரையைப் பிய்த்துக்கொண்டு அவை பக்கவாய்களைப் பிளந்தவாறு வருவது போன்ற தோற்றங்கள் சாதாரணமாகிவிட்டன. அற்புதங்களை நம்பாத ஒருத்திக்கு அதிகப்படியாகவே நேரிட்டன பிரமைகள்.

ஒக்கப்படுத்தப்பட்ட பத்தொன்பதாம் நூற்றாண்டுப் புத்தகத்தின் நடுத்தண்டில் விரல் பட்டபோத உள்ளங்காலிலிருந்து ஒரு மகிழ்ச்சி நடுக்கம் ஏறியது. பாலுறவின் உச்சகட்ட சிலிர்ப்பு மாதிரி. அன்னா சத்தியநாதம் அம்மாள் மரணப்படுக்கையில் படுத்து, கணவரை ஜெபம் செய்யச் சொன்னபோது மூன்றாம் மாடியில் துக்கம் கொண்டாட நானும் அணிலும்தான். கிறிஸ்துவ மதத்தைப் பரப்ப முதன்முதல் குதிரை மேல் கிளம்பியவர் இந்த மாடியின் வலை சன்னல்களை உடைத்துத்தான் போனார். ஒரே வீட்டை விற்றுத் தன் கல்யாணத்தை நடத்தக்கூடாது என்று தன் தகப்பனாருக்குக் கடிதம் எழுதி வைத்துவிட்டு நெருப்பிட்டுக் கொண்டு ஒரு வங்காளப் பெண் மரித்த ஜ்வாலை இங்கு பாம்பாய்த் துரத்தியது. ஜ்வாலை மூன்றாம் மாடி முழுவதும் பரவி எனக்கும் அணிலுக்கும் தன் ரூபத்தைக் காட்டிவிட்டுப் போயிற்று. தெலுங்கு அட்டவணைக்காரர் இருக்கவில்லை அன்று.

மூன்றாம் மாடியில் இருந்தவை புத்தகங்கள் இல்லை. உயிர் ஓடிக்கொண்டிருந்த தலைமுறைகள். ஒன்பது கஜம் புடவையுடன், காலில் ஷூ போட்டுக்கொண்டு பாட்மின்டன் மட்டையுடன் மாமிகள் விளையாடினர் வெள்ளைக்காரிகளுடன். பெண்கள் கணவன்மார்களை எப்படி குஷிப்படுத்தவேண்டும் என்ற உபதேசங் களைப் பலர் அலுக்காமல் செய்து கொண்டிருந்தனர். 'பெண்ணே' என்று முகத்தைக் கனிவுடன் வைத்துக்கொண்டு விளித்து, பெண் தர்மத்தை மிகவும் சிரமப்பட்டு விளக்கினர். நல்லதங்காள் "என்னை விட்டுவிடம்மா" என்ற பையனை விடாமல் துரத்தி அவனைக் கிணற்றில் போட்டுத் தானும் குதித்தாள். இறந்துவிட்ட விதவையின் தலை மழிக்கப்படாமல் காரியங்களைச் செய்ய மாட்டேன் என்று பிராமணர் அடம்பிடிக்க, முழங்கால்வரை தொங்கிய கூந்தல் இறந்தவளின் உடலிலிருந்து மழிக்கப்பட்டது. "காமனின் பாணங்கள் தாளேனே." என்று ஆடி ஆடிக் களைத்தனர் பொட்டுக்கட்டிக்கொண்ட பெண்கள். ராட்டை சுற்றிய பெண்களுடன் காந்தி பேசினார். தியாக பூமி உமாராணி "நான் அடிமை இல்லை" என்று முழங்கினாள். "காசினி" நவீன மோஸ்தர் வளையல்பற்றிப் பெண்கள் பகுதியில் எழுதினாள். கணவன் பொதி சுமக்க, கைவீசி நடந்தாள் "ஆனந்த விகடன்" அட்டைப்படப் பெண். தமிழுக்காக உயிர் துறப்போம் என்றாள் தாமரைக்கண்ணி அம்மையார். நிஜப்பெயர் ஜலஜாக்ஷி. பணம் தராவிட்டால் காந்தி வரமாட்டார் என்றெழுதிய ராஜாஜி யுடன் நேரில் சென்று மோதினார் ராமாமிருதத்தம்மையார். எல்லோரும் இருந்தார்கள். நானும் இருந்தேன். சிலசமயம் புகை உருவங்களாக கனமில்லாமலும், சிலசமயம் எடை கூடி அழுத்து பவர்களாகவும் இருந்தார்கள். விதவைப்பெண்ணின் தலை மழிக்கப் பட்ட அன்று, கனம் நெஞ்சை அழுத்தியது. ஷவரக்கத்திகளாகத் தெரிந்தன. ஒவ்வொரு கொத்து மயிரும் ஓசையுடன் கீழே விழுந்தது. சொர சொரப்புடன் கன்னத்தை உரசியது. அணில், வாலால்

இரண்டு முறை தட்டிப் புழுதி கிளப்பியபின்தான் நினைவு மீண்டது. அம்மு சுவாமிநாதன் அட்டையிலிருந்த 'கல்கி'யில் சாய்ந்திருந்தது. பசையைத் தின்று முடித்துவிட்டது போலும்.

ஓட்டை வழியாகக் கீழே பார்த்தேன். லைப்ரரியன் தலை நாற்காலியில் சாய்ந்திருந்தது. மேஜைமேல், "பொருள்: கயிறு" என்று தலைப்பிட்ட கோப்பு. அவருக்குப் பிடித்த கோப்பு. மூன்று வருடங்கள் முன்னால் பளீரிட்ட வயலட் நிறக் கோப்பு இப்போத மங்கி முனை திரிந்து முறுக்கின்றிக் கிடந்தது. இங்குள்ள பழம்பத்திரிகைகளை மாத வருடவாரியாகப் பிரித்துக்கட்டக் கயிறு தேவை என்ற முதல் கடிதத்தோடு கோப்பு தொடங்கும். வாசகசாலைக்குக் கயிறு கொடுக்கப் படுவது அமுலில் இல்லை. இதை மீற என்ன காரணம் காட்டலாம் என்பதை விளக்குக என்ற பதிலுக்குப்பின் மாதவாரியாகப் பிரிக் காதவை கலந்துபோய் உபயோமற்றுப் போகலாம் என்றும், யாருக்கு என்றும், ஆராய்ச்சியாளர்களுக்கு என்றும், எத்தகைய ஆராய்ச்சி யாளர்களுக்கு என்றும், தமிழ் நாட்டவரா வெளிநாட்டவரா என்றும், கடிதங்கள் சேர்ந்து போய்விட்டன. ஒரு நாள் லைப்ரரியன் தன் நிஜார்ப் பையிலிருந்து கயிற்று உருண்டையை எடுத்தார். அதன்பின் ஒரு கயிற்று உருண்டைக்கான தொகையைத் திருப்பித்தரக் கடிதம் எழுதி, எதற்காகக் கயிற்று உருண்டை என்று பதில் வர ஆரம்பித்தது. சாயங்கால வேளைகளில் கோப்பு மேஜைக்கு வரும். இன்னும் கயிற்றுப் பணம் திரும்பவில்லை.

அணில் கத்தியது. கீச் கீச். யதார்த்தத்துடன் என் ஒரே தொடர்பு. அதே சமயம் என் பிரமைகளின் தோழன். கீச் கீச்.

தெரிகிறது. நேரமாகிவிட்டது. உன் பசை தீர்ந்து விட்டது. இந்தப் பெண்களை எனக்கு விட மனதில்லை. ஒரு மந்திரக் கயிறு எங்களை இணைக்கிறது. அவர்கள் பேசுவது கேட்கிறது. ஷண்முகவடிவு வீணை யின் ஸட்ஜத்தை மீட்டுவது காதுள் பாய்கிறது. "வண்ணத்தாமரையைக் கண்டு நாடி மதுர கீதம் பாடும் வண்டு ... மதி மயங்கி ..." என்று கேபி. சுந்தராம்பாள் பாட "மதி மயங்கி ..." என்று ஆர்மோனியத்துடன் பின்பாட்டுப் பாடுகிறாள் வாசவாம்பாள். மெரினா கடற்கரையில் வை.மு.கோ. சுதந்திரக்கொடியை ஏற்றுகிறார். கையில் குழந்தையுடன் சிறை போகின்றனர் ஹிந்தியை எதிர்த்த பெண்கள்.

பார், இது வேறு உலகம். அந்தப் பசை கொஞ்சமாவது உனக்குள் ஏற்றியிருக்கும் உலகம். எனக்கும் உனக்குமான உலகம்.

"கீழே வாங்களேம்மா?"

சிரித்தவாறு அண்ணாந்து விளித்தான்.

"இதோ."

மேலே ஏறி வந்தான்.

'ரூலு வந்திடுச்சு." .

"என்ன ரூலு?"

"இதையெல்லாம் ஒக்கப்படுத்த ரொம்ப செலவாகுது. நெறையப் பேரு உபயோகிக்கிறது கிடையாது. ஒங்களை மாதிரி ஒண்ணு ரெண்டு பேரு. இதுக்காக ஆளு, பசை எல்லாம் கவர்மெண்டு செலவு பண்ண முடியுமா? எரிச்சுடப் போறாங்க."

"எதை?"

"பழைய, வேண்டாத இந்த புஸ்தகமெல்லாத்தையும்தான்." ஓர் எண்ணமும் எழவில்லை. மனத்தின் விளிம்பில் ஒரு நுனிப்புல் எண்ணம். கயிற்றுக் கோப்பின் முடிவு வந்தாயிற்று போலும். இனி அடக்கம்தான்.

"வாங்கம்மா."

இரும்புப் படி அருகே வந்து திரும்பிப் பார்த்தேன். மாலைச் சூரியனும் மெர்க்குரி விளக்கும் எரிக்கப்படப் போகிற பழுப்புப் புத்தகங்களின் மேல் அதீத ஒளியைப் பரப்பின – சிதைமேல் முதலில் பரவும் நெருப்பு வெள்ளம் மாதிரி. அவன் விளக்கை அணைத்தான்.

மங்கிய சிவப்பு வெளிச்சத்துடன் கருமை கலந்து கடும் சிவப்பாய், மாய ஜ்வாலை வீச்சு. அணில் சன்னலுக்கு எதிரே நாலு காலையும் பரப்பி, வயிற்றின்மேல் சரணாகதி நிலையில் படுத்திருந்தது. படி இறங்கும்போது ஒரு சிறு எண்ண அலை.

அந்த சன்னல் வடக்குப்புறம் பார்த்த சன்னல்.

